193

REG. NO. M. 2997.

RÉPUBLIQUE FRANÇAISE

LIBERTÉ —ÉGALITÉ.—FRATERNITÉ.

தனிப்பிரதி அணா 1

ஆசிரியர்:
யாழ்ப்பாணம்
தென்கோவை.
ச. கந்தைய பிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.




LE RÉDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI.
Tamil Pandit
Jaffna
CEYLON.

# VITTAGAM

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமை தோறும் வெளிவருவது

Bureau de la Direction :—
RUE D'AMBALATADOU AYER
MADAM, NO. 2,
Pondichery.

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.
குறள்.

காரியாலயம்:—
அம்பலத்தாடு ஐயர் மடத்து வீதி,
நெம்பர் 2,
புதுவை.

VOL. II. புதுவை, யுவ ஹு வைகாசி மீ கம உ (23—5—35) NO. 26.

## திருமந்திரம்.

கன்னியுங் கன்னி யழிந்திலள் காதலி
துன்னியங் கைவரைப் பெற்றன ளேமொழி
பன்னிய நன்னூற் பகைவரு மங்குள
ரேன்ன விம்மாயை யிருளது தானே.

இருளது சத்தி யொளியதெம் மண்ணல்
பொருளது புண்ணியர் போகத்து ளின்பந்
தெருளது சிந்தையைத் தெய்வமென் றெண்ணி
யருளது செய்யுமெம் மாதிப் பிரானே.

ஓதிய வண்ணங் கலையி னுயர்கலை
யாதியில் வேதமே யாமென் றறிகிலர்
சாதியும் பேதமுந் தத்துவ மாய்நிற்ப
ளாதியென் றோதின ளாவின் கிழத்தியே.

கும்பக் களிறைந்துங் கோலோடு பாகனும்
வம்பிற் றிகழு மணிமுடி வண்ணனு
மின்பக் கலவி யினிதுறை தையலும்
அன்பிற் கலவியு ளாயொழிந் தாரே.

இன்பக் கலவியி லிட்டெழு கின்றதோ
ரன்பிற் புகவல்ல னாமெங்க ளப்பனுந்
துன்பக் குழம்பிற் றுயருறும் பாசத்து
ளென்பிற் பராசத்தி யென்னம்மை தானே.

ஆணைய மாய்வருந் தாது ளிருந்தவர்
மாணைய மாய மனத்தை யொருக்கிப்பின்
பாணைய மாய பரத்தை யறிந்தபின்
றாணைய மாய தனுதனந் தானே.

உ
திருவருள் துணை.




காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றுன்வந்து முந்துமினே.

[திருவாசகம்]

# வித்தகம்

புதுவை
யுவ ஸு வைகாசி மீ 10 உ

## ஐயமிட்டுண்.

ஒளவையார் அருளிய ஆத்திசூடி என்னும் வேத சூத்திரக்கொத்துள் ஒன்றாகிய இவ் அமுத வாக்கியம் உலகியலுக்கும் உண்மை நிலைக்கும் ஒப்பிய பொருளை உடையது. உண்மை நிலைக்கு ஒப்பிய பொருளோ எனின், வீடு பெறச் சமைந்தான் ஒருவன் காய மாயம் கழிந்து நித்தியத்துவம் அடைதற்கு உரிய முக்கிய சாதனமாய் உலக மாக்கள் அறிய முடியாத அரு மறையாய் அமைந்துள்ளது. ஈண்டு உலகியலுக்கு ஒப்பிய பொருள் ஒரு சிறிது கூறி உண்மை நிலைக்கு ஒப்பிய பொருளும் ஒருவாறு சுருங்க உரைக்கப்படுகின்றது.

பிச்சையை இரப்பவர்களுக்குக் கொடுத்து நீயும் உண் என உலகியலுக்கு ஒப்பிய பொருள் கூறப்படுகின்றது. ஐயம் என்றால் என்னே? அது தான் ஐம்பூதக் கூட்டுறவினால் ஆகிய உடலுயிர் ஆக்கத்துக்கு — சீவ உய்வுக்கு அளிக்கப்படும் உணவு எனப் பொருள்படும். உலகியலில் "ஐயம் இடுதல்" என்புழி, ஐயம் என்பது உணவு — அன்னம் — அரிசி என்பன வற்றில் மிகச் சிறியதோர் பாகத்தையே — கைப்பிடியையே குறிப்பதாகும். இதனை யாசகர்களுக்குக் கொடுத்தலே ஐயம் இடுதல் என்பது. பிக்ஷை — பிச்சை என்பதும் இதுவே. பிக்ஷை என்பது யாசகர்களுக்குக் கொடுக்கப்படுவது எனப் பொருள்படும். ஒவ்வொருவரும் தம் தம்மால் இயன்றவரை யாசகர்களுக்குக் கொடுக்க வேண்டும் எனவும் இயன்றது கொடுத்தல் யார்க்கும் அரிதன்று எனவும் நூல்கள் கூறும்.

"இயல்வது கரவேல்"

(ஆத்திசூடி) என ஒளவையார் அருளியதும் அறிக.

உன்னால் இயன்றதை (வறுமையால் யாசிப்பவர்க்கு நீ) ஒளியாதே (மறுக்காது கொடு) என்பது இதன் பொருளாகும். ஒவ்வொருவரும் தாம் தாம் உண்ணும் உணவில் ஒரு சிறிய பாகத்தையாவது — ஒரு கைப்பிடியையாவது இரப்போர்க்கு ஈதல் முடியாத காரியமன்று. பின் வரும் பிரபல சுருதிப் பிரமாணங்களும் "ஐயம் இட்டுண்" "இயல்வது கரவேல்" என்பனவற்றின் உலகியலுக்கு ஒப்பிய பொருளை நன்று வலியுறுத்துகின்றன.

### திருமந்திரம்.

யாவர்க்கு மாமிறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாமுண்ணும் போதொரு கைப்
[பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே.

(டி 1-ம் தந். அறஞ்செய்வான்றிறம்—
செ. 2)

### கந்தரலங்காரம்.

மலையாறுகூறெழவேல்வாங்கினானைவணங்
[கியன்பின்
நிலையானமாதவஞ்செய்குமினோநும்மை
[நேடிவருந்
தொலையாவழிக்குப்பொதிசோறுமுற்ற
[துணையுங்கண்டீர்
இலையாயினும்வெந்ததேதாயினும்பகிர்ந்
[தேற்றவர்க்கே.

(டி செ. 51)

ஈகையின் சிறப்பும் அதனால் ஆம் பயனும் "ஈவது விலக்கேல்" என்னும் கட்டுரையினும் கூறப்பட்டன. ஈகையினாற்றான் — அன்னக் கொடையினாற்றான் லௌகிகமும் பாரமார்த்திகமும் சித்திக்கும். அன்னக் கொடையின் சிறப்பையே நூல்கள் எல்லாம் விதந்து கூறுவன வாகும். பண்டைக் காலம் தொட்டே நமது இந்து தேசத்தில் — தமிழ் நாட்டில் அறக் கூழ்ச் சாலைகள் — அன்ன சத்திரங்கள் முதலியன அமைந்துள்ளன. பின் வரும் பிரமாணங்கள் பசிப்பிணியின் கொடுமையையும், அதனைத் தீர்த்தலினும் மிக்க புகழும் புண்ணியமும் இல்லை என்பதனையும் நன்று புலப்படுத்துகின்றன.

### மணிமேகலை

11-வது. பாத்திரம் பெற்ற காதை.

"குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்
[லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாணணி களையு மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்
[தும்
பசிப்பிணி என்னும் பாவி அது தீர்த்தோர்
இசைச்சொ லளவைக்கு என்நா நிமிராது
..................................................
மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்
[லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே

உயிர்க்கொடை பூண்ட உரவோ யாகிக்
கயக்கறு நல்லறங் கண்டனை..............."

(ஷை அடி 76-81; 95-88)

12-வது. அறவணர்த் தொழுதகாதை.

"மாக்கள் தேவர் எனஇரு சார்க்கும்
ஒத்த முடிவி னோற முரைக்கேன்
பசிப்பிணி தீர்த்த லேன்றே யவருந்
தவப்பெரு நல்லறஞ் சாற்றின ராதலின்
மடுத்த தீக்கொளீஇய மன்னுயிர்ப் பசி [கெட
எடுத்தனள் பாத்திரம் இளங்கொடி [தானென."

(ஷை அடி 116-120)

13-வது. ஆபுத்திரன்திறம் அறிவித்த காதை.

"ஐயக் கடிஞை கையி னேந்தி
மையறு சிறப்பின் மனைதொறு மறுகிக்
காணார் கேளார் கான்முடப் பட்டோர்
பேணுந ரில்லோர் பிணிநடுக் குற்றோர்
யாவரும் வருகவென் றிசைத்துட னூட்டி
உண்டொழி மிச்சிலுண் டோடேலை மடுத் [துக்
கண்படை கொள்ளுங் காவலன்'ருனென."

(ஷை அடி 109-115)

16-வது. ஆதிரை பிச்சையிட்டகாதை.

"..........................................
பாரக மடங்கலும் பசிப்பிணி யறுகென
ஆதிரை இட்டனள் ஆருயிர் மருந்தென"

(ஷை அடி 134, 135)

புறநானூறு.

"..........................................
உண்டி முதற்றே உணவின் பிண்டம்
..........................................
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே
.........................................."

ஔவையார் மூதுரை.

ஆறிடுமேடுமடுவும்போலாஞ்செல்வம்
மாறிடுமேறிடுமொலித்தீர்—சோறிடும்
தண்ணீரும்வாரும்தருமமேசார்பாக
உண்ணீர்மைவீறுமுயர்ந்து.

(ஷை வாக்குண்டாம்)

இவற்றால் பசிப்பிணியின் கொடுமையும், அன்னக் கொடையின் மாண்பும், அன்னமே ஆருயிர் மருந்து என்பதும், வறியார்க்கு ஈவதே ஈகை என்பதும், அற்றார் அழி பசி தீர்த்தலே— ஐயம் இட்டு உண்ணுதலே அன்புநெறியை ஆக்கமுறச் செய்யும் சிறந்த சாதனம் என்பதும் நன்று பெறப்படுதல் கண்டு கொள்க.

வறியார்க்கு – வறுமையால் வருந்தி இரப்போர்க்கு ஈவதே ஈகை ஆதலால், ஐயத்தை ஐயம் எனப்படும் உணவை — அன்னத்தை — ஆருயிர் மருந்தை ஒவ்வொருவரும் தம் தம் தகுதிக்கு ஏற்றவாறு — இயன்றவரை கரவாது — இயல்வது கரவாது உவந்து ஈந்து உண்டு வாழவேண்டும் என "ஐயமிட்டுண்" என்னும் அமுத வாக்கால் ஆணை தந்து, இத்தகைய அன்னக் கொடையினுற்றான் புகழும் புண்ணியமும் உண்டு எனவும், உள் நீர்மை எனப்படும் அன்பு நெறி ஆக்கமுறும் எனவும் உய்த்துணர வைத்தனள் எமது பாட்டியார் என அறிதற்பாற்று. இவ்வாற்றால் "ஐயமிட்டுண்" என்னும் அமுத வாக்கின் உலகியலுக்கு ஒப்பிய பொருள் ஒரு சிறிது கூறப்பட்டது. மேல் இதன் உண்மை நிலைக்கு ஒப்பிய பொருள் ஒரு சிறிது கூறி இக்கட்டுரை முடிக்கப்படும்.

உண்மை நிலைக்கு ஒப்பிய (பாரமார்த்திகம்) பொருளில் "ஐயமிட்டுண்" என்பது நிறைமுறையான அருந்தலையே உணர்த்தி நின்றது. பல பிறப்புக்களுக்கு வித்தாய் விளங்கும் அவாவினால் கண்டதை எல்லாம் — இச்சைப்பட்டதை எல்லாம் அருந்தித் துன்புறாது குருவருளால் நிறை முறையோடு அருந்தினால் அருந்தியது பொருந்தும். பொருந்தினால் சரீரத்துள்ள அசுத்த நிறை என்னும் அழுக்கு அழுக்காகிய மாயை அணு அணுவாக அனந்தலடையும். அதனால் "உற்ற ஆக்கையின் உறு பொருள்" ஆகிய இறைவன் திருவடி காணப்படும்; அமல ஒளி பெருக்கமடையும். நித்தியத்துவம் உளதாகும்.

குறள்.

மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை உயிர்க்கு.

(ஷை 95-ம் அதி. மருந்து செ. 5.)

என்னும் தேவர் திருவாக்கும் "ஐயமிட்டுண்" என்னும் அமுத வாக்கின் உண்மைப் பொருளையே நுதலியதாகும்.

ஔவை குறள்.

அன்னத்தா லாய உடம்பின் பயன்எல்லாம்
முன்னோனைக் காட்டி விடும்.

(ஷை உடம்பின் பயன் செ. 10.)

என்னும் வேத வாக்கின் உண்மையும் இதுவே ஆம். பின் வரும் இருக்கு வேதப் பிரமாணமும் இவ் உண்மையையே நன்று வலியுறுத்துகின்றது.

இருக்குவேத புருஷ சூக்தம்.

புருஷைவேதம்ஸர்வம்யத்பூதம்யச்சபவ்யம்!
உதாம்ருதத்வஸ்யேசாநயதந்நேநாதிரோ [ஹதி!

"சென்றனவும் வருவனவுமாகிய இவையாவுமாய் மேலும் மோட்சத்துக்குத் தலைவனுமாய் இருப்பவன் புருஷனே. அப் புருஷன் அன்னத்தால் வளருகிறான்" என்பது இவ் அரிய பெரிய சூக்தப் பொருளாகும். அன்ன ரஸமாகிய விந்துவுள் யாவும் அடக்கம். "அவை எல்லாம் ஆனது விந்து" (ஔவை குறள்) என அருளிச் செய்தாள் ஔவை. அறுசுவையுடைய அன்னம் தூல சூக்கும உய்வுக்கு இன்றியமையாதது என்பதும் சகல போகங்களுக்கும் ஆதாரம் அன்னமே என்பதும் அரிய பெரிய இருக்கு வேதத்தாலும் நன்று வற்புறுத்தப்பட்டது. விரிப்பில் பெருகும். "வித்தகம்" தொகுதி 1 இல

19 இல் "அருந்தல் பொருந்தல் ஆனந்தல்" என்னும் கட்டுரையில் காண்க.

அசுத்த நிறையின் ஆதிக்கத்தால் ஐயம் என்னும் அசுத்த ஐம்பூதக் கூட்டுறவினால் ஆய தன்னிலையாகிய சரீரத்தில் எவ் எப் பௌதிகங்கள் எவ் எவ் ஏற்ற இறக்க நிறையாகிப் பொலிந்திருக்கின்றனவோ அவ்வவற்றைக் குறைத்தும் கூட்டியும் சமப்படுத்த வேண்டி நிறையும் இனமும் அறிந்து அருந்தப்படும் அன்னமே — அறு சுவை உண்டியே வாய்மையான முன்னிலை ஆகாரமாகிய ஐயம் எனப்படுவது — நிறை முறையான உணவு எனப்படுவது என்க. சுருங்க உரைக்குமிடத்து ஐம்பூதக் கூட்டுறவினாலாகிய மருளுடம்பில் உள்ள அழுக்கை அகற்றி அதனை விமலமாக்குதற்குரிய உணவே — பிணி மூப்புச் சாக்காடுகளை நீக்கி நித்தியத்துவம் அளித்தற்குரிய உணவே — அருந்தலே ஐயம் எனப்படும் என்பது. சரீர பௌதிகங்களின் ஏற்றிழிவை – விஷம நிலையை — திணைமயக்கத்தைக் குருவருளால் அறிந்து அவ்வற்றைச் சமப்படுத்திப் பௌதிகத் தூய்மை பெற்று உய்தி அடைதற்கேற்ற நிறை முறையான அருந்தலைக் கைக்கொள்வதே பாரமார்த்திக நெறி என்னும் வேத உண்மையை, நிறை முறை இல்லா அருந்தல் பொருந்தல்களால் சாதலடையும் வல்லபம் பெற்ற உலக மாக்களுக்கு, உணர்த்துதற் பொருட்டே

"ஐயமிட்டுண்"

என உண்மை நிலைக்கு ஒப்பியவாறு கூறியருளினார் நமது பாட்டியார் என அறிதற்பாற்று.

ஐயம் என்றால் பயம் என்பர்—அச்சம் என்பர். ஐயம் அசுத்தமாகிய ஐம்பூத காரியம் — அசுத்த நிறையின் காரியம் — அசுத்த நிறை அமைந்த மருளுடம்பின் பண்பு — சீவ சப்தத்தால் கிளக்கப்படும் உடலுயிரின் பண்பு என்க. அழுக்கை அழுக்கால் அகற்றும் உபாயத்துக்கு ஒப்ப பௌதிகங்களின் திணை மயக்கத்தாலாய விஷம நிலையாகிய ஐயத்தை இனமான காரமுள்ள முன்னிலை உணவுகளாகிய ஐயத்தால் — நிறை முறையான அருந்தலால் நீக்க வேண்டும் — மாற்றவேண்டும் என்க. வேறு வாயில் இல்லை. தத்துவப் பெரியார் துணிபும் வேத உண்மையும் இதுவே ஆம்.

இவ்வாறு வாய்மையாக "ஐயமிட்டு உண்" ணுதலால் காயமாயம் கழியப் பெற்றவனை—மாற்றிப் பிறந்தவனைப் பசி பிணி மூப்புக்கள் அடைய மாட்டா. பின் வரும் தேவர் திருவாக்கும் இவ் அரிய பெரிய உண்மையையே உணர்த்தி நின்றது.

## குறள்.

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னும்
தீப்பிணி தீண்ட லரிது.

(ஷை 23-ம் அதி. ஈகை- செ. 7.)

(இ–ள்) பாத்து ஊண் மரீஇ யவனை = முன்னிலையாகிய உணவுப் பொருள்களில் தன் சரீர பௌதிக இயல்புக்கு — பௌதிக நிறைக்கு இனமானவை இன்னவை என்று அறிவால் பகுத்து உண்ணுதல் பொருந்தப் பெற்றவனை, பசி என்னும் தீப்பிணி தீண்டல் அரிது– அழி பசி உறு பசி என்னும் கொடிய நோய்கள் அடையமாட்டா என்பது. பாத்து ஊண் மரீஇ யவன் என்பது "ஐயம்இட்டுஉண்" என்பதன் உண்மை நிலைக்கு ஒப்பிய பொருளை உடையது. அழி பசி—"மானம் குலம் கல்வி...." முதலியன நீங்க வரும் பசி. உறு பசி — மிக்க பசி. பசிப் பிணி தீண்டல் அரிது எனவே இனம் பற்றி ஏனைய பிணி மூப்புச் சாக்காடுகள் தீண்டல் அரிது என்பது சொல்லாமலே அமையும். நமது சரீரமாகிய பூமியில் — ஆலயத்தில் விளங்கும் சாண் வட்ட குண்டம், ஓம குண்டம், வைகுண்டம், யாக சாலை, பாக சாலை, பாத்திரம் முதலிய எத்தனையோ பல திருநாமம் பெற்ற பாத்திரத்தில் வளர்ந்து எழுகின்ற தேயுவுக்கு — வைசுவானரன் என்னும் சிவாக்கினிக்கு அதன் அளவறிந்து—பாத்திர இயல்பறிந்து ஏற்ற ஆகுதி கொடுத்தலே "பாத்து ஊண் மருவுதல்" என்பது — ஐயம் இட்டு உண்ணுதல் என்பது — சரீர பஞ்ச பௌதிகங்களின் நிறை அறிந்து ஏற்ற உணவுகளை உண்ணுதல் என்பது

"பாத்திரம் அறிந்து பிச்சை யிடு"

என்னும் பழமொழியின் பாரமார்த்திகத்துக்கு ஒப்பிய பொருளும் இதுவே ஆம்.

## அப்பர் தேவாரம்.

பாத்திரம்சிவம் என்று பணிதிரேல்
மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே."

என்னும் வேத வாக்கின் உண்மைப் பொருளும் இதுவே ஆம். பாத்திர இயல்பு அறிந்து ஏற்ற ஆகுதி கொடுத்தால் — ஐயம் இட்டு உண்டால் அத்தேயுவாகிய மூலாக்கினி அமல மடையும். இதனால் உடலுயிர் விமலமாய் அமல மடைந்து பிணி மூப்புச் சாக்காடும் பிறவியும் ஒழிந்து நித்தியத்துவம் பெறும் என்க. ஐபம் இட்டு உண்ணுதலாற்றான் வாய்மையான ஈவு ஏற்பு உளவாகும். அசுத்தம் நீங்கி அமலம் ஆக்கமுறுதலே வாய்மையான ஈவு ஏற்பு எனப்படும். இத்தகைய ஈவு -- ஈதல் இயையாத இடத்து அசுத்த நிறையின் ஆதிக்கத்தால் பிணி மூப்புக்களே நம்மை வருத்துவனவாகும். இத்தகைய ஈதலின் உண்மையை அறியாமையாற்றான்—ஈதலால் இன்புற முடியாமையாற்றான் உலகோர் பலர் துன்பங்களைச் சகிக்க முடியாது சாதல் நன்று என அலறுகின்றனர். அஃதாவது "இவ்வாறு கிடந்து பல காலம் கஷ்ட மடைவதினும் செத்துப் போவது நல்லது. இன்னும் காலம் வரவில்லையே" என ஓலமிடுகின்றனர். இது பற்றியே இத்தகைய வாய்மை

(8-ம் பக்கம் காண்க.)

# உண்மை முத்திநிலை ஆராய்ச்சி மறுப்பு.

"வித்தக"ப் பத்திராசிரியர் எழுதியது.

(தொகுதி 2. 25-ம் வாரத் தொடர்ச்சி.)

"நன்றாகக்காய்ச்சிப்புதஞ்செய்யவல்லார்கட்(கு)
இன்றேசென்றூசனையெய்தலுமாமே."

என அருளிப் போந்தனர் எம் அண்ணல் என அறிதல் வேண்டும். இவ்வாறு தாதை தாள் இரண்டையும் காய்ச்சிப் பதஞ் செய்தலே சண்டேசுரப்பேறு எனப்படுவது. முன்னிலைகளை நிறை கண்டு பஞ்சீகரணிக்க அறியாது ஒருபால் ஒதுங்கும் போலி நிட்டையாளரும் — போலிப் பிரமசாரிகளும் சாதலடையும் வல்லபம் பெற்ற சவ சண்டிகளே ஆதலால் தாதைதாள் அறவீசி ஞானப்பாலுண்டு சைவ சண்டியைக் காணுதல் — சண்டேசுரப்பேறு பெறுதல் — உண்மைச் சைவராய் நித்தியத்துவம் பெறுதல் முடியாத காரியமே என்பது சொல்லாமலே அமையும்.

## திருவுந்தியார்.

காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே
மாயக்கள்ளுண்டாரென் றுந்தீபற
வறட்டுப்பசுக்களென் றுந்தீபற

வறட்டுப்பசுக்கள் — அமுதம் ஊறமுடியாத அசுத்த தநுவுடைய சீவர்; சாதலடையும் வல்லபம் பெற்ற மருளுடம்பினர். மெய்யடியார் அள்ளூறுக்கையில் ஊறும் இவ் அமுதம் எம் பெருமான் வடிவமே என்பது பின் வரும் திருவாக்குக்களால் நன்று புலப்படும்.

## திருவாசகம்.

"...... ஊற்றானஉண்ணாரமுதேஉடையானே"

(ஷை சிவபுராணம்.)

..........................................................................
காயத் துள்அமுது ஊற ஊறநீ கண்டு கொள்என்று காட்டிய
சேய மாமலர்ச் சேவ டிக்கணம்........."

(ஷை சென்னிப்பத்து செ. 5.)

அமிருதம் என்பது சிவ பிரான் திருநாமம் என உப நிடதங்கள் முழங்குகின்றன.

## முண்டக உபநிடதம்.

"ப்ரஹ்மைவேதமம்ருதம்"

(2-2-11)

இந்த பிரமமே அமிருதம் — சிவம் என்பது இதன் பொருளாகும்.

## தைத்திரியம்.

"அம்ருதோ ஹிரண்மய:"

(1—6—1)

சிவ பிரான் பொன்வண்ணர் என்பது இதன் பொருளாகும்.

மேலே கூறப்பட்ட அரிய பெரிய அள்ளூறுக்கையானது வறட்டுப் பசுக்களாய் வதிந்து நிலத்துட் புதைக்கப்பட்ட ஒருவகை உபாசக நிட்டையாளராகிய மருளுடம்பினர்க்கும் பிண வியலடைந்த அவர் சரீரங்களுக்கும் உரியதே என ஓலமிடுவோர் பித்தலாட்டக் கூற்றுக்கு என் செய்வது?

## திருவாசகம்.

"..............................................................
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையும் இருப்ப தாக்கினன் என்னில்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே."

(ஷை திருவண்டப்பகுதி.)

[கன்னற்கனி என்பது பிரணவ அமுதத்தை உணர்த்தி நின்றது. இருத்தல்—பிரணவடிவு பெற்று நித்தியத்துவம் அடைந்து உலக குருவாகி வதிதல். பிரணவ வடிவமே (ஓ வடிவம்) சீவன் முத்தர் வடிவம். பின் வரும் பிரமாணம் இவ் உண்மையை நன்று வலியுறுத்துகின்றது.

## சுத்தசாதகம்.

இன்ன தன்மையவாஞ்சுத்தபாவனையில்
இரும்பிராரத்தம்போயொளித்துத்
தன்ன துள்நின்றிங்கிடைவிடா தூறுந்
தக்கதோர்பிரணவஅமுதம்
அன்னதையருந்திமுன்வடிவதுவும்
அங்ஙனம்ஓமயமாகி
இந்நிலமதனில்தோற்றன்மாத்திரமா
யியங்குதல்சீவன் முத்தியதே.

(ஷை செ. 90.)

[ஓ மயம் — பிரணவ வடிவம். தோற்றல் மாத்திர மாய் இயங்குதல் — பார்வை ஒன்றற்கே புலப்படும்படி சஞ்சரித்தல். இதனால் "சாயா புருட" வடிவமாகிய ஓ வடிவம் உடையவரே சீவன் முத்தர் என்பது நன்று வலி யுறுதல் கண்டு கொள்க.]

அனமதும்பாலுஞ்சருக்கரைகண்டு
மங்கனிவகைகனுந்தேனும்
இனமவையொன்றாய்க்கூட்டியருசியி
னிதயகின்றிடைவிடாதூறும்
கனபிரணவவமுதத்தையேயருந்திக்
களிப்பவர்மீட்டுமிச்சகத்தின்
பினமுறவிடயவின்பைஎண்ணிடுமோ
பிராரத்தமும்மிலையவர்க்கே.

(ஷை செ. 91.)

இதனால் பிரணவ அமுதின் இயல்பும் அதனை உண் ணும் சீவன் முத்தர்க்கு அசுத்த மாயா போகமாகிய பிரா ரத்த அநுபவம் இல்லை என்பதும் வெள்ளிடை மலையாம். பிராரத்த அநுபவம் மருளுடம்பினராகிய சீவர்க்கே உரி யது.

உபயநல்லமுதேபுசித்தனுதினமும்
உபயமேவடிவதுவாகி
அபயமென்றுரைக்குமுயிர்களுக்கிரங்கி
யஞ்சலென்றவர்களைநோக்கி
உபயவர்நெறியின்பயனைமுன்னுணர்த்தி
உபநிடச்சுருதிநின்றுரைக்கும்
அபயமற்றொன்றுமிலாதவிந்நெறியே
அனுக்கிரகம்புரிந்திடுமோல்.

(ஷை செ. 93.)

[உபயநல்லமுது — பிரணவ அமுது. உபய நெறி — கிரியா மார்க்கமும் உபாசனா மார்க்கமும். அபய மற் றொன்று மிலாத இந் நெறி — அச்சம் என்பது ஒரு வகையானும் இல்லாத சுத்த மார்க்கமாகிய சிவாத்துவித சித்தாந்த நெறி. அபய மற்றொன்றும் இலாத நெறி என்பது மரணமற்ற நெறியாகிய நித்தியத்துவ நெறி என் பதை உணர்த்தி நின்றது. இச் செய்யுளால் பிரணவ தநுவுடைய சீவன் முத்தர் உலக குரவராய்ப் பக்குவான் மாக்களுக்கு அநுக்கிரகம் புரிதல் கூறப்பட்டது.]

## திருவாசகம்.

"..........................என்னில்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராஅமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே."

(ஷை திருவண்டப்பகுதி)

இதனால் சீவன் முத்தர் கருணா மூர்த்திகளாய் வதிந்து அருளமுதம் உண்டு தமது பிரணவ தநு அருள் வடிவாக மாற்றமடையப் பெறுதல் கூறப்பட்டது. பின் வரும் பிர மாணமும் இவ் உண்மையையே நன்று வலியுறுத்துதல் கண்டு கொள்க.

## சுத்தசாதகம்.

இந்நிலைசின்னாட்சீவர்கணிமித்த
மிருந்தனுக்கிரகமேபுரிந்தும்
தன்னிலையதனினின்றருளமுதந்
தான்புசித்தருண்மயமாகி
அந்நிலைபரமமுத்தியிற்சிவத்துக்
கங்கமாய்நிகழுமுன்போலென்
றிந்நிலைசாமத்தசிபதமுரைக்கு
மிதுசிவாத்துவிதமென்றுணர்வாய்.

(ஷை செ. 94)

இதனால் மருளவத்தைக்கும் அருளவத்தைக்கும் இடைநிலையாகிய பிரணவ அவத்தையுடைய சீவன் முத் தரே உலக குரவராய் வதிந்து பக்குவான் மாக்களுக்கு அநுக்கிரகம் புரிய வல்லார் என்பதும், அத்தகைய பிர ணவ தநுவும் காலக்கிரமத்தில் அருளாகிக் கரைந்து அரு வமாகச் சிவாங்கமாகித் திகழ்வார் என்பதும், இதுவே சாம வேதத்து அசி பதப்பொருளைக் கூறும் சிவாத்து வித உண்மை என்பதும் அஃதாவது "தத்துவமசி" மஹா வாக்கியப் பொருளாகிய அங்கலிங்க ஐக்கியம் என் னும் உண்மைச் சைவ முத்திநிலை என்பதும் வெள்ளிடை மலையாம்.

பிரணவ அவத்தையுடைய சீவன் முத்தர் மருள வத்தை அருளவத்தை என்னும் இரண்டின் அநுபவத் தையும் அறிவர். மருளவத்தையில் நிற்கும் சீவர் அருள வத்தையின் இயல்பை அறியமாட்டார். அருளவத் தையை அடையப் பெற்றோர் — ஞானாகாசத்தில் ஒடுங் கப் பெற்றோர் பக்குவ சீவர்களுக்குக் குரு வடிவாய் வந்து உணர்த்துதல் கூடாது. ஆதலால் மருள் அருள் என்னும் இரண்டற்கும் இடைநிலையாகிய பிரணவ அவத்தை யுடைய சீவன் முத்தரே குருவடிவாய்ப் போந்து பக்கு வான் மாக்களுக்கு மூவகையான அவத்தைகளின் இயல் பையும் உபதேசித்து அவர்களை ஆட்கொள்ள உரியராவர். இதனால் மருளுடம்புடைய சீவர் உலக குரவராதற்கு உரியராகாமை கண்டு கொள்க.

மேலே கூறியவைகளால் கயிலை முதற்குரவனாகிய ஆசான் அருளால் பெறப்படும் உரிய சாதகங்களால் இரு வினை ஒப்பு மலபரிபாகம் வாய்ந்து உடலுயிர் விமலமாய் அமலமடைதலே முத்தி நெறி என்பது நன்று புலப்படும். இருவினை ஒப்பு மலபரிபாகம் கைகூடப் பெறுதல் எளி தன்று. மா அரிது அரிது அரிது என்றே கூற ஆம். வேடம் பூசை கைசாடை கண் சாடை முதலிய நடை

கொடிகளால் இருவினை ஒப்பும் மல பரிபாகம் என்னும் கந்தழியும் சித்திக்கற்பாலனவாகா. இவற்றின் மேல் அடையப்படும் சத்திநிபாதமோ என்றால் அதன் பெற்றி யாரே கூறவல்லார்? சாத்திரப் பெயர் பூண்டு உலகில் வழங்கும் நூல்கள் இவ்வுண்மைகளை விளக்கமுற உரைக்க வில்லை. மொழிபெயர்ப்பாகவும் பிறவாறும் நூல்களை உஞற்றிய வேதாந்த சித்தாந்த சாத்திர நிபுணர் இவ் வுண்மைகளை அறியாதவர் என்பது — இத்தகைய அநுபவம் இல்லாதவர் என்பது வெள்ளிடை. வேதாகமங்களின் உண்மைப் பொருளைக் குருவருளால் அறியும் ஆற்றலும் காதலும் இன்றி அவ்வேதாகம வாக்கியங்களைத் தமது வித்தியா சாமர்த்தியத்தால் அவற்றின் உண்மைப் பொருளுக்கு முரண்படுமாறு மொழி பெயர்த்தாரும் உளர். இம் மொழி பெயர்ப்பு நூல்களையே உண்மை என நம்பிய உலகோர் முத்தி நெறி இது என அறியாது — இருவினை ஒப்பு மலபரிபாகம் இன்னவை என அறியாது அவற்றை அசுரத்தஞ் செய்து சில நடை கொடிகளால் அவற்றை அடைந்து விடலாம் எனவும் அடைந்து விட்டதாகவும் அமைந்து விதிவசப்பட்டு மாண்டு போனதும் சாலோகம் முதலிய பதங்களுள் ஒன்றையாவது (அவற்றின் பொருளறியாது) அடைந்து விடலாம் எனத் துணிந்து தென் புலக்கோமகனுக்கு நல்விருந்தாயினர் — ஆகின்றனர். சரீரம் விமலமடைதலாகிய மல பரிபாகம் கைவரப் பெற்றாலன்றி அச்சரீரத்தில் அருட் சத்தி பதிதலாகிய சத்திநிபாதம் உளதாதல் முயற்கொம்பேயாகும். அருட்சத்தி அணு அணுவாகப் பதியப் பெறுதலால் அமலம் பெற்ற உடலமே ஞானசத்தியாய் நித்தியத்துவம் பெறுவது என்க. பின்வரும் பிரமாணம் சத்திநிபாதப் பெற்றியை நன்றுபுலப்படுத்துவதாகும்.

### திருமந்திரம்.

களிம்பறுத் தானெங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பறுத் தானருட் கண்விழிப் பித்துக்
களிம்பணு காத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே.

(ஷை 1-ம் தந். உபதேசம் செ. 2.)

களிம்பு—உடலுயிரில் உள்ள அழுக்கு என்னும் மலம். களிம்பு அறுத்தல் மலம் விமலமாதலாகிய மல பரிபாகத்தை உணர்த்தி நின்றது. களிம்பு அணுகாத கதிரொளி — எம்பெருமான் திருவடி எனப்படும் அமல ஐகாரம் அமல ஒளி.

### திருவாசகம்.

"...... காட்டா தனவெல்லாம் காட்டிச் சிவங்காட்டித்
தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி......"

(ஷை திருஅம்மானை செ. 6.)

என அருளப்பட்டதும் அறிக. பளிங்கில் பவளம் பதித்தல் — உடலகத்துள்ள அன்பு என்னும் அப்பில் அருட் சத்தி பதியச் செய்தல் சத்திநிபாதம். பின்வரும் பிரமாணமும் இவ் உண்மையையே நன்று வலியுறுத்துகின்றது.

### பட்டினத்தடிகள் பாடல்.

"பளிங்கிற்பவளமடிபற்றற்றபாவலர்க்குக்
கிளிஞ்சிலைவெள்ளிஎன்பார்கிட்டாதார்கிட்டுவரோ."

"சாணைகத்துள்ளே அழுந்திய மாணிக்கம்"

(திருமந்திரம் 7-ம் தந். சிவபூசை செ. 21) எனப்படும் எம்பெருமான் திருவடியை உடலகத்துக் கண்டு மாயையின் வரலாற்றை அநுபவமாக அறிந்தவர்களுக்கே அஃதாவது அதிட்டான ஆன்மாவின்கண் ஆரோபிதமான மாயாப் பிரபஞ்சம் அவ் அதிட்டானமே அன்றி வேறன்று எனக் காணும் மெய்யடியார்க்கே பளிங்கில் பவளம் பதிதல் எனப்படும் சத்திநிபாதம் உளதாகும் என்பது இதனால் நன்று பெறப்படுதல் கண்டு கொள்க. வேத உண்மை இதுவே ஆம்.

ஈண்டு மல பரிபாகம் என்பதன் பண்பும் பயனும் ஒரு சிறிது விளக்கமுற உரைக்கப்படும். சரீரத்துள்ள ஒன்பது ஓட்டைகளாலும் மயிர்த் துவாரங்களாலும் ஒழுகுவது மலம் — மலமாகிய அழுக்கு. சரீரம் அழுக்குடையதாகவே அதனோடு அபேதமாயுள்ள மனமும் அழுக்குடையதே என்பது சொல்லாதே அமையும்.

### திருவாசகம்.

"..................வல்வினையேன் றன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவ மென்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகி
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
........................................."

(ஷை சிவபுராணம்.)

விலங்கு மனம் — மாறுபட்ட மனம்—அழுக்கு மனம். இதனால் உடலுயிர் அழுக்குடையன என்பதும் உடலில் உள்ள அழுக்கு நீங்காத போது மனதிலுள்ள — உயிரில் உள்ள அழுக்கும் நீங்காது என்பதும், இவற்றால் இறைவன் மாட்டு வாய்மையான அன்பு வைத்து உளங் கசிந்து உருகுதல் முடியாத காரியம் என்பதும், இவ் அழுக்கு எம்பெருமானால் நீக்கப் பட்டது — மலம் விமலமாக்கப் பட்டது என்பதும் வெள்ளிடையாம். இவ் அழுக்

காகிய மலம் குருவருளால் பெறப்படும் உரிய சாதகங்களால் விமல மடைவதே மலபரிபாகம் என்பதும் — பாசு பதம் என்பது. பாசு என்னும் மாசு— மாசு என்னும் மலம் பதமடைவது — பரிபாகமடைவது என்பது. சவ மணம் நாறும் இவ் அழுக்காகிய மலம் விமல மடைதலே சிவமணம் என்பது; சிவசம்பந்தம் என்பது. மல சரீரம் விமலமடையாது அழுக்கு மலிந்து இருப்பதனாற்றான் — அசுத்த பௌதிகங்கள் நிறை பேதித்து இருப்பதனாற்றான் — திணை மயக்கத்தினாற்றான் நரை திரை மூப்புப் பிணிகளும் சாக்காடும் உளவாகின்றன. இவை ஒழிய வேண்டும் எனவும், ஒழியப் பெற்றோம் எனவும் மெய்யடியார் அருளியமை அவ்வவர் திருவாய்மலர்ந்தருளிய நூல்களில் பரக்கக் காணப்படும். அவற்றுள் ஒரு சில இங்கே காட்டப்படுகின்றன.

## திருவாசகம்.

பிறவிதனை யறமாற்றிப் பிணிமூப்பென் றிவையிரண்டும்
உறவினொடு மொழியச்சென் றுலகுடைய ஒருமுதலைச்
செறிபொழில்சூழ் தில்லைநகர்த் திருச்சிற்றம் பலமன்னி
மறையவரும் வானவரும் வணங்கிடநான் கண்டேனே.

(ஷை கண்டபத்து செ. 6)

## திருவாய்மொழி.

"களிப்புங்கவர்வுமற்றுப்பிறப்புப்பிணிமூப்பிறப்புமற்று
ஒளிக்கொண்டசோதியமாயுடன்கூடுவதென்றுகொலோ......"

ஓயுமூப்புப்பிறப்பிறப்புப்பிணி
வீயுமாறுசெய்வான்திருவேங்கடத்
தாயன்நாண்மலராமடித்தாமரை
வாயுள்ளும்மனத்துள்ளும்வைப்பார்கட்கே.

## அப்பர் தேவாரம்.

பிறப்புமூப்புப்பெரும்பசிவான்பிணி
இறப்புநீங்கியிங்கின்பம்வந்தெய்திடும்
சிறப்பர்சேறையுட்செந்நெறியான்கழல்
மறப்பதின்றிமனத்தினுள்வைக்கவே.

(ஷை திருச்சேறை திருக்குறுந்தொகை செ. 3)

## ஞானசம்பந்தர் தேவாரம்.

தரைமுதலுலகினிலுயிர்புணர்தகைமிக
விரைமலிகுழலுமையொடுவிரவதுசெய்து
நரைதிரைகெடுதகவதுவருளினனெழில்
வரைதிகழ்மதில்வலிவலமுறையிறையே.

(ஷை திருவலிவலம் பண்–வியாழக் குறிஞ்சி செ. 6)

## திருமந்திரம்.

மேலை யணுவில் விரைந்திரு காலிடில்
காலனு மில்லை கதவுந் திறந்திடும்
ஞால மறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவன் பராநந்தி யாணையே.

(ஷை 3-ம் தந். கேசரியோகம் செ. 7)

அஞ்சனம் போன்றுட லையறு மந்தியில்
வஞ்சக வாத மறுமத் தியானத்தில்
செஞ்சிறு காலையிற் செய்திடிற் பித்தறுப்
நஞ்சறச் சொன்னோம் நரைதிரை நாசமே.

(ஷைஷை சரீரசித்திஉபாயம் செ. 4)

(தொடரும்)

---

(4-ம் பக்கம் தொடர்ச்சி)

யான ஈதல் சீவ உய்வுக்கு இன்றியமையாதது எனவும், சாதற் றுன்பத்தினும் துன்பம் தருவது பிறிதில்லை எனினும் வாய்மையான ஈதல் கைகூடாத இடத்து (பெரு நோய்களும் மூப்பும் மிக நலியப் பன்னாட் கிடந்து துன்புறுவதினும்) அச் சாதலை அடைதலும் இனியதே எனவும் அவ் ஈகையின் அருமை பெருமை தோன்ற அவ் அதிகாரத்து இறுதியில் கூறுவாராயினர் நமது பொய்யில் புலவர் என அறிதற்பாற்று.

## குறள்.

சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை.

(ஷை 23-ம் அதி. ஈகை- செ. 10)

மேலும் விரிப்பில் பெருகும்.

இதுகாறும் கூறியவைகளால் "ஐயமிட்டுண்" என்னும் ஔவையார் அமுத வாக்காகிய அரிய பெரிய தமிழ் மந்திரத்தின் உலகியலுக்கு ஒப்பிய பொருளும் உண்மை நிலைக்கு ஒப்பிய பொருளும் ஒருவாறு உணரத்தகும்.

சுபம்.




## "வித்தகம்"

### சந்தா விவரம்.

உள் நாட்டிற்கு முன் பணம் ரூ. 3 0 0
வெளி நாட்டிற்கு ,, ,, ரூ; 4 0 0

வித்தக நிலையம்,
புதுவை.


## அறிவிப்பு

கடிதர்களின் அபிப்பிராயங்களுக்கு அவர்களே பொறுப்பாளிகள்.

Imprimerie "VITTAGAM" — Pondichery. Le Directeur-Gerant. R. Nagarattinam